மென்னவெங் கொடிய ராகி யிருபடைக் கலங்க ளோடுந்
துன்னுறு முகிலு மஞ்ச வார்த்தனர் தோன்றி னோரால். ௨௩௧

தோன்றிய வவுணத் தீயோர் தொகுத்தொரு பதினான் கென்ன
வான்றிடு முலக மனைத்து நிறைந்தன ரனையோர்க் கண்டு
சான்றிடு முயிரப்ப டங்கிக் கைபடபொருள் சோர்ந்து றந்தோர்
போன்றனா புலனி யூந்து புலவரென் றுரைக்கப் பட்டோர்.

சூலமு மழுவும் வாளுஞ் சுரிகையு மெழுவும் பிண்டி
பாலமுஞ் சரமும் வீசித் தாருகன் படிவங் கொண்டோ
ராலமு மனலு மன்ன வடற்பெருங் காளி தன்னைத்
தாலமும் விழுங்கு மாவஞ் சளிபபடை யொடும்வ ளைந்தார்.

மிண்டிய வசுரர் தங்க டோற்றமுஞ் சமர்க்கு மிக்கு
மண்டுறு செயலுங் கண்டு மாதொரு பாகன் சொல்லுட்
கொண்டதன் படைய னைத்துங் கூவியவ் வசுரர் தம்மை
யுண்டிடு மென்று தாமு மவர்தமை யுண்ப தானாள். ௨௩௪

முத்தலை யதனு லன்னோர் மொய்ம்பினிற் குத்தி நெய்த்தோர்
கைத்தலத் திருந்த பாழிக் கபாலத்தி னேற்ற ருந்தி
மைத்தட வரைக ளன்ன வளரியாக் கைகளு முண்டா
ளுத்தரந் தனிலு மோங்கு முதரவங் கியினான் மிக்காள். ௨௩௫

விரிந்திடு வயிறொண் குண்ட மாயிடை மேவு மங்கி
யெரிந்திடு முதவ கன்று னெனவசு ரர்கடஞ் சோரி
சொரிந்தவ ருடனி ணங்க ளேர்த்தொரு வீர யாகம்
புரிந்தன ளுலக மெல்லாம் புகழ்தருங் குமரி யன்றே. ௨௩௬

மூர்த்தியொன் றதனி லாண்டு மொய்த்தயோ கினிக ளோடு
மார்த்துவந் தெதிர்த்த தீய வவுணரை யெல்லா முண்டாள்
சீர்த்தியங் குமரி பின்னர்த் தாருகன் றெரிந்து சீறிப்
பார்த்தனன் றனியாய் நெஞ்சம் பதைத்தவட் புடைப்ப வந்தான்.

வந்திட விலைவெஞ் சூல மார்பினின் மீண்டு மோச்சிச்
சிந்திடு குருதி யங்கைச செழுங்கபா லத்தேற் றண்ணு
லிந்தமண் மகடன பார மிறக்கின னென்ன வங்கன
வெங்தொழி லவுணன் மாள யாக்கையும் விழுங்கி னாளால்.

மற்றது கண்டு விண்ணோர் வலியதா ருகனை யன்னை
செற்றன ளுங்கி யிங்கன் றேவரென் றுரைக்கு நம்மைப்
பெற்றன ளின்றென் றூர்வப் பெருங்கடற் படிந்து நெஞ்ச
முற்றவெந் துயர கன்று பாடினு ரோடி னாரால். ௨௩௯

வேலையூ டெழுந்த நஞ்சம் விமலனுண டளித்த செய்கை
போலநீ யய்யா வின்று பொருவிரு ருகனை யுண்டு
பாலரா மெமைய ளித்தா யென்றனா பழிச்சி வானோர்
சூலிமீ திடைவி டாமற் சொரிந்தனர் பூவின் மாரி. ௨௪0

ஆயிடை யுளம கிழ்ந்தே யவுணர்கண் மலைப்ப மாய்ந்து
போயின வனிக முற்றும் பொருகவென வுயிரபெற் றுய்ய
நாயகி குமரி நின்று நவின்றன ணவின்ற காலை
மேயின துயிலொ ழிந்து விழித்தென வெழுந்து சூழ்ந்தார.

கலிவிருத்தம்.

அன்னது காலையி லவுணர் சோரியுந்
துன்னிய வுடல்களுந் துய்த்த தன்மையான்
மன்னிய குமரிதன் மதிம யங்கியே
தன்னிக ரிலையெனத் தருக்கி னாளரோ. ௨௪௨

தருக்கிய வுளத்தினு டாங்கி நல்லியாழ்
திருக்கா விரலினுற் றெறித்துப் பாடியே
முருக்கிய புயங்களு முடியுந் தாள்களுங்
கரக்குலவ களுஞ்செறி களத்தி னுடினள். ௨௪௩

கடித்திட வெள்ளது நாடிப் பெண்கடாம்
வெடித்திட நிலமுடு வீழ வாயிக
டுடித்திட வியயமுந் துளங்கக் கைகளோ
யடித்தன ரதிர்த்தன ராடன் மெய்யனர். உ௪௪

கொட்டுபு கரங்களைக குலால னேமிபோல்
வட்டணை விரலினில் வருகின் ருர்சிலர்
கிட்டிய வலகைகள் கீதம் பாடியே
நட்டம திடவுட னடிக்கின் ருர்சிலா. உ௪௫

தண்ணுமை சலையடிச் சதிக்கி கைசெயொலி
நண்ணுற முழக்குபு நடிக்கின் ருர்சில
ரண்ணலந் தயித்திய ராக்கைக் குன்றின்மேற்
றண்ணெனை விவர்ந்தனர் துவைக்கின் ருர்சிலர் உ௪௬

மாகர் தெறியுமம் மணிகள் பற்பல
வாகவீழ் தலையெடுத் தாடு வார்சிலர்
வாகுவால் விலாவுறத் தாக்கி மெய்வளை
தோகையா னடநவின் றுழல்வ ரோர்சிலர். உ௪௭

மெலிவுறு மடிகள்வாய் விழிபு ரூமங்
குலிவிகா ரப்படக் குனிக்கின் ருர்சிலர்
வலியவெண் கவடிக ணிரைத்து வைத்தபோ
னலியெயி றிலகுற நகைக்கின் ருர்சிலர். உ௪௮

முத்தலை வேலினுன் முடைப்பி ணங்களைக்
குத்துபு தாங்கியே குனிக்கின் ருர்சிலர்
மத்தக மெனக்குடர் மாலை தோளிடா
வத்திக ளெனவதிர்த் தாடு வார்சிலர். உ௪௯

இனையன பலவிதத் தெண்ணில் யோகினி
வனிதையர் குருதிநீர் வாய்ம டுத்திடு

எளிவரு களிப்பினான் மத்த நாகமே
யனையவெங் குமரியோ டாடி னாரரோ. ௨௰௰

ஆடுறு மரவமு மவர்மு பூக்கமுங்
கூடுறு மங்கைகள் கொட்டு மோசையு
நீடுறு முலகெலா நீங்க வந்தெழா
மூடுறு முகிற்கண முழக்கை வென்றவே. ௨௰௧

பொழிந்தன புவியெலாம் பொடித்த வெற்பெலாம்
விழுந்தன முகிலெலா மெலிந்து மாசகையி
ருழுந்தன வுயிரெலா மலைந்த வான்கடா
சூழ்ந்தன வுலகெலாந் துயர வேலையே. ௨௰௨

துப்புறு குமரிக டொகுதி யாடுறச்
செப்பரும் புகழுடைச் சேடன பாரினை
யப்பரம் பொறாதெலா தாயி ரங்கமுங்
கொப்புளங் கொளவுளங் குலைந்து தாங்கினான். ௨௰௩

மாதவ னயன்மகத் தரசன் வானவர்
மூதறி வுடையமா முனிவர் யாவரும்
பேதுற வந்திளம் பிறைமு டித்தவெம்
மாதியோ டபயமென் றறைதன் மேயினார். ௨௰௪

எந்தையே தாருக னிழைத்த வெந்துயர்
வந்தமா காளியெங் கட்கு மாற்றியே
யந்தவான் றயரினு மதிக மாக்கினள்
முந்துகான் முட்பறித் துமுளைய டித்தல்போல். ௨௰௫

தாருக னல்வருந் துயரந் தன்னைநின்
பேருரு வாலொரு பெண்ணி னீக்கினை
யாருறு செருக்கினு ளவள்செய் துன்பமு
நீருறு சடையினாய் நீக்கி யாட்கொணீ. ௨௰௬

நஞ்சினை யருந்தியுங் கனலை யேந்தியு
மஞ்சிட மதகரி யட்டு மேழையே
முஞ்சிட வருளிய வொருவ காளிதன்
விஞ்சிய செருக்கையும் வீட்டி யாளுவாய். ௨௫௭

என்றிவ ரனைவரு மியம்பிக் கைதொழ
நின்றிட வெங்கணு நிறைந்த வெம்பிரான்
வென்றியங் குமரிதன் மிகுஞ்செ ருக்கினை
யொன்றொரு சாழலா லொழிக்க வுன்னினான். ௨௫௮

### கலிநிலைத்துறை.

உன்னு நாயக னுலகெலா மீன்றவ ளோடுந்
துன்னு வானகணஞ் சூழ்தரச் சூர மகளி
ரன்னை யாடிடம் வடவன மாகவா யிடையின்
மன்னு பேருருட் டன்மையா லிமைப்பினில் வந்தான்.

வந்து காளிமுன் பேருருக் கொண்டுமா மறையு
மந்த நாரணக் கடவுளு மறிவதற் கரிய
சொந்து லாமலர்த் திருவடி சிவந்திடக் குனித்தான்
றந்தை யாகியெவ் வுயிரையு மளித்தரு டலைவன். ௨௬௦

கோதுக் காகர மாகியே செருக்குறுங் குமரி
மாதுக் கோர்புற மளித்தவன் செயல்கண்டு வணங்கி
யேதுக் காடுகின் றுய்வறி தென்றொடு மீண்டு
வாதுக் காடுதி வருதியென் றுரைத்தனன் மயங்கி. ௨௬௧

என்ற வாசகங் கேட்டலு மடியவர்க் கெளிய
னன்று காளிநீ தருக்கதாண் டவஞ்செய நவின்றாய்
வென்றி தோல்விகண் டுரைத்திடச் சான்றுநம் விமலை
நின்று தாண்டவம் புரிதியென் றாடின னிமலன். ௨௬௨

கற்றை வேணியிற் செருகிய கதிரிளம் பிறையைச்
சுற்றி வால்கொடு கட்செவி நான்றிடச் சுருப்ப
பற்ற தாகிய பதமலர்ச் சிலம்பொலி பரப்பப்
பொற்ற மாடக நாயகன் றிருநடம் புரிந்தான். ௨௬௩

படியும் வானமு நடுங்கிடப் பரவைக ளடங்கக்
கொடிய யோகினிக் குழூவெலாம் பாணிகள் கொட்ட
நடந வின்றிட மயன்மிகு யாயவோ நடித்தா
ளடியர் வேண்டிய வேண்டியாங் களிப்பவ னடனால்.

இருந்து தென்றிரு வாலங்காட் டருந்தவஞ் செய்யா
யிருந்த முஞ்சிகே னொடுகார்க் கோடக னென்னப்
பரந்த சீர்த்திமா நாகமுஞ் செஞ்சடைப் பகவன்
புரிந்த நாடகங் கண்டருங் கதியிடைப் புகுந்த. ௨௬௫

வேத நாரணன் விண்ணவர் முனிவரர் வியலன்
போத நாடகங் காண்டலு மெய்ம்மயிர் பொடிப்ப
வோதும் வாசகந் தளர்ந்துள நெக்குநெக் குருகிக்
காத லாலர கரவெனக் கூப்பினர் கரங்கள். ௨௬௬

அண்டர் நாயகன் றிருநடம் புரிவயி னடுத்துப்
பண்டை நான்மறை யுருவுகொண் டன்பொடு பாடக்
கண்டு நான்முகன் றாளமொத் தினைது காலை
மண்டு மாபுக ழருணந்தி மத்தள மதிர்த்தான். ௨௬௭

எங்க ணாயக னுலகெலா மாடல்கண் டிருக்கு
மங்கை நாயக னடனமிவ் வாறுசெய் தருள
வங்கு வாதுசெய் துடன்சுழன் றாடுவா ளெய்த்தாள்
பொங்கு மானமுற் றிடுதலாற் பினுநடம் புரிந்தாள். ௨௬௮

கலிவிருத்தம்.

கொந்து ளாடனை நோக்குபு வாதினன்
வந்த நாடக மாற்றவ ருள்கொளா

வந்த வேலையி னண்டமு கூற
வெந்தை தாமொன றெடுத்தன னென்பவே. ௨௬௯

தொண்ட ராகுலந் தீர்க்குந் தொழிலினோ
னண்ட கூட மளவு மெடுத்ததா
ளூண்ட சால முமிழ்ந்தெடு மான்முனங்
கொண்ட பேருருக் கொள்கை நிகர்க்குமால். ௨௭௦

## அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மண்ணிடை யொருதா ளூன்றி மற்றொரு கமலப பொற்றாள்
விண்ணிடை யெடுத்து மேலோ னடிப்பது வீரி கண்டு
துண்ணென நாணுட் கொண்டு சுடுங்கனற் பட்ட வெண்பூ
வண்ணமொ தெனப்புலர்ந்து வதனம்வன் றலைகு னித்தாள். ௨௭௧

நாணினை முகங்க விழ்ந்து நண்ணிய செருக்கு நீங்கி
யேனுலாங் குமரி நிற்ப வெண்ணில்யோ கினிக ளெல்லாங்
காணுற நடமொ ழிந்து சூத்திரங் கழல நிற்கு
மாணுலாம் பாவை போல வறிதுநின் றனர்க ளன்றே. ௨௭௨

ஆங்கது கண்டு விண்ணோ ருவகைபூத் தமலன் மீது
தூங்குறு மழையின் மும்மை சொரிந்தனர் பூவின் மாரி
பாங்கரின் வந்து வீழ்ந்து பணிந்தன ரெழுந்து துள்ளி
வாங்குதெண் டிரைக்க டற்கெண் மடங்கொலி யெழுந்து ௨௭௩

ஆயகா லையினிற் காளி யஞ்சியா ரணங்க டாமு
மாயனு மியருங் காணு நின்றனை மதித்தி டாமற்
பேயனேன் செய்த தீமை பொறுத்தருள் பெரும வென்று
தூயமா ஞானு னந்த சோதியைத் தொழுது நின்றாள். ௨௭௪

நின்றவ டன்னை நோக்கி நீயுளம் வெருவ லென்றே
தன்றிரு வருள்பு ரிந்து சண்டதாண் டவமி தம்ம
வின்றனக் கிதனை நோக்க லரிதென வுரைத்துத் தன்று
ளென்றலை பொறித்த முக்க ணெம்பிரா னியம்பு கின்றான்.

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திகழ்வுறு மிந்த வடவனந் தனக்குத் தென்றிசை யாகவோர் நகரம், புகழ்வுறுங் கூவ புரமென வுளதப் புரிகயி லையங்கிரி தன்னி, னிகழ்வுறு பெருமை பெற்றது நமைப்போ னிகரிலா வதனிடை யென்று, மகிழ்வொடு முலக மனைத்தையும் புரப்பான் மதித்திரக் காநடம் புரிதும். உஎசு

அப்பெருங் கூவ புரத்திடை யேகி யருள்புரி நர்திரு நடனஞ், செப்பருங் காத லாற்றினங் கண்டு திகழுமந் நகருளா ரெல்லா, மொப்பரு நமது நந்தியங் கணத்தி னுள்ளவ ரென்றுநீ கருதி, வெப்பது முதலாம் பிணிமிடி பேய்கள் விலங்கினுன் வருந்துயர் களைவாய். உஎஎ

என்றிவை யிசைத்து நம்மொடு தருக்க மியம்பிநீ நடநவின் றதனு, லுன்றனக் கொருபேர் தருக்கமா தாவென் றேங்குக வினையது மன்றித், தென்றிருக் கூவ நகர்தனைக் காத்துச் செறிந்திடு பீடைக ளரிப்ப, வென்றிகொள் பெயர்பீ டாரியென் றுலகின் விளங்குக வென்றனன் விமலன். உஎஅ

அன்னசொற் குமரி கேட்டுள மகிழ்வுற் றன்பினுன் மும்முறை வணங்கி, நின்னரு ளதனு லடியனேன் றீமை நீத்தெனை யாண்டவா ரமுதே, பன்னருங் கூவ புரத்திடைச் சென்றுன் பவுரிகண் டந்நகர் காப்பே, னென்னவங் கியம்பி விமலனை விடைகொண் டெய்தினள் கூவமா நகரின். உஎகூ

எய்திய குமரி கூவமா நகரை யிறைஞ்சியா லயத்தினுட் போகிச், செய்தவ முடையோர் விழியினி னொளிதிற் றெரியும்விற் கோலநா யகனைக், கைதொழு தகலா வன்பினுற் பணிந்து களிப்பொடும் போந்தடி யவர்க்கு, மெய்தரு மருள்சேர் வளர்சடைக் கூத்தன் விளங்கரு நாடகங் கண்டாள். உஅ0

கண்டனு மனலிற் படுமெழு கெனவே கரைந்துள முருகிவாள்
விழிநீர், கொண்டல்கண் மலைமேற் சொரிவது கடுப்பக் குவி
முலை மீதுவீழ்ந் தொழுக, மண்டல மதனி லேந்துறப் பணிய
வணங்கியங் கெழுந்தனள் போற்றி, விண்டிட வரிய மெய்ப்பரா
னந்த வெள்ளத்திற் றிளைத்தன ளன்றே. உஅ௩

இத்திற மமல னருணடங் காணு வின்பமுற் றிடுபெருங்குலி,
கைத்தல மமர்ந்த மழுவினோ டனலங் காட்டினி லருளிய முறை
யே, மெய்த்தவர் புகழுங் கூவமா புரத்து விருப்பொடு மிருந்
தொரு தயரு, மத்திரு நகரிற் குழுவகை யென்று பன்னை
போற் காத்திருக் கின்றாள். உஅ௪

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

இனையதிருக் கூவபுரப் பெருமையினை யிவ்வளவென் றியம்ப
வல்லோ, ரனையநகர் தனையிடங்கொண் டருடிருவிற் கோலநா
யகரே யல்லாற், பினையொருவ ருரைத்திடுதற் கெளியதுவோ
வியாதனெனப் பெயர்பெற் றுள்ள, முனிவனருள் கொண்டுசிறி
ததன்பெருமை தமியேனு மொழியப் பெற்றேன். உஅரு

அண்ணலருந் தவமுனிவீர் முத்திதரு சிவஞான மளிக்க
வல்ல, கண்ணுதலான் றலங்கடமி லனந்தகோ டியினிலொரு
தலத்தை யுன்னித், துண்ணெனவிங் குரைத்தியெனப் புகன்ற
னீ ராதவிறற் சுரர்கள் போற்று, மெண்ணரிய புகழ்க்கூவ மாந
கரைக் குருவருளா வியம்பி னேனால். உஅசா

இக்காதை தனையொருக்காற் புகன்றருள வினவினவ ரிசைச
கூர் வண்டு, புக்காரு நளினமலர்ப் புங்கவனு குவரிருக்காற் புக
லிற் கேட்பின், மைக்காரி னிகர்நிறத்த கயல்விழிப் புவியளந்த
மாய னவர், முக்காலவ் வகைபுரியி னேனையாளுங் கயிலைமலை
முதல்வ னவார். உஅஎ

பழுதிறிருக் கூவபுரா ணத்தினையோ திடுபவர்க்கும் பயன்
கேட் போர்க்குங், கழுதுபல விலங்குநவக் கிரகாதி யாலணையுங்
கடிய வின்னன், முழுதுமிலை யவமாணந் துற்கனவு மிடிபிணி
கண் முற்றா மினரு, மெழுதுபவர் வினையனைத்து நமன்கணக்
கர் தமரேட்டி னெழுதி டாரே. உஅசு

இக்கதையை யன்பினொடு படிப்பவர்களரும்பயன்கேட் டிடு
வோர் மென்மை, மக்கடமை புபிராதிடுவ ரெனறென் ॥ மொழி
யாத வாழ்வு சேர்வர், மிககபெருஞ சித்திகளோ ரிருநான்கு
மடைவாமனம் விழைந்த வெல்லா, மககண்மெ பெறகுவரீ ரே
ழுலகு தனிலுமவாக கரிய தின்றே. உஅஎ

நீங்கிறிருச் சினகரமே தவர்மடமே யறந்திறம்பாத திகழ
மில்லை, மோங்குமலைக் கடமைநன் னதிககரையே யெறுமிவற
று ளொன்றின் மச்க, பூங்கடிமண் டபமியற்றி யதிலிருந்து
திருக்கூவப புராணந் தன்னைத, தேங்கமழு மலர்புகையொண்
சுடாகொடுபூ சனையியங்கள் சிலம்பச் செய்தே. உஅஅ

ஒதிடுகே வோதிடுநாட் டொடங்கிநால் வகையுண்டி யோடு
மன்ன, மாதவருக் கிடுகமுடி வுறுநாளிற் படித்தவர்கண் மலரப
பொற் றுளி, ஞெதாவு கொடுபாம சிவனென்வே வந்தனைசெய்
தரவை யோடுந, திரிலணி விளங்கிலம்பாற் பசுவிவைக ளளித
திடுக சிறக்கப பின்னர். உஅகூ

பொய்யின்மறை புகழ்திருவிற் கோலநா யகர்ப்புகழும் புராண
மோடு, துய்யமன னுடன்படித்துப் பொருள்விரிக்கும் பெரி
யோனைத் தொழுது போற்றி, வையமுத லூர்திகளி னிருத்தி
மிகு பல்லியம்வான் மழையி னார்ப்பச், செய்யநக ரலங்கரித்து
வலம்வருவித் திடல்வேண்டுந் திகழு மன்பால். உகூ0

இந்தவகை புரிந்திடுவோர் பாவகோ டிகளகற்றி யிம்பர் தன்னிற், புந்திவிழை பொருளனைத்து மீந்துதிரு விற்கோலப் புனித மூர்த்தி, கந்தமல ரயன்முதலாங் கடவுளர்க்கு மரியபா கதியு நண்ணத், தந்தருள்வ னெனவுரைத்தான் சூதமா முனிவனெனுந் தவத்தர் கோமான். உகூக

சூதமுனி யுரைத்தமொழி நைமிசமா வனத்துறையுந் தூய நெஞ்ச, மாதவர்க ளனைவருங்கேட் டெந்தனையோன் றனைவழுத்தி வந்து கூவப், போதகர் தனினரிய விற்கோல நாயகனைப் போற்றி மேவி, மூதறிவு வந்தகனுன் மூலவிரு ளகன்றபா முத்தி சேர்ந்தார். உகூஉ

கலிவிருத்தம்.

நீதி லாவிறை செங்கோல் வழங்குக
வேத வாகம மெய்ந்நெறி யோங்குக
போத ஞாதிய புண்ணியர் மல்குக
வோது மூவர்தம் மொண்டமிழ் வாழ்கவே. உகூங

தாருகன்வதைச்சருக்கம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-எ0ரு.



ஸ்ரீநந்திகேசுவரபுராணம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.



சிவப்பிரகாசசுவாமிகள் சேவடிவாழ்க.



உ

# பிழை திருத்தம்.

பிழைகளைத் திருத்திக்கொண்டே படித்தல் நலம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௭௧ | ௫௮ | ௨ | ணரியாவா | ணரியவா |
| ௭௪ | ௧௫ | ௧ | கெல்வாம் | கெலாம் |
| ௧௦௫ | ௨௧௧ | ௩ | டார்ந்து | டார்த்து |

உ

கணபதி துணை.

# திருக்கூவப்புராணக் குறிப்புரை.

## கடவுள் வாழ்த்து.

௧.—விநாயகக்கடவுள் தம்மடியவரை இவ்வுலக வளத்தினும் அந்த விண்வளத்தினும் உறவிக்கவே, அவரால் நிவேதிக்கும் கவளத்தில் விருப்பங்கொண்டேற்றருளுவரென்க; கு-பூமி. கவளம்-யானைக்கிடு முணவு. அந்தம் படிவம் பவளத்து நிகர்த்து என மாறுக.

௨. இறுத்தல் - தங்கல். வாய்மிச்சில்-தம்பலம். துத்தல்-புசித்தல். விரகு-அறிவு. அச்சிறுத்த வடிகள்-அச்சிறுத்த விநாயகர், இவர் ஸ்தலவிநாயகர்.

௩. நம் காமத்தழல் அவிப்ப நீர் கொண்டார்; தாம் ஆணும் பெண்ணுமா யிருப்பதைக்காட்ட, மழு மானை வலமும் இடமுமாகக் கொண்டா ரென்க.

௪. பொற் சுட்டியின்கீழ் திலகத்திற்றப் பெற்றிருப்பது அரவம் மதியைக் கவர்கின்ற பரிசுபோல்வது.

௫. அம்பிகை நுதல் பிறைபோல்வதால், அத்துணைகொண்டு முடிப்பிறை அராப்பகையையும், அரவு நிதம்பத்துணைகொண்டு கைம்மான் பகையையும், மான் விழித்துணைகொண்டு வியாக்கிர பாதராகிய புலிப்பகையையும் நீத்திருப்ப. பாம்பை மான் உண்ணும் என்னும் வழக்குணர்க.

௬. வன்னி-அனல், கிளி; பணி பயிலவருவார்-தொண்டுபுரிய எய்துமவர், சித்திர மமையப்பெற்றகச்சு; சுவர்க்கம்-தேவலோகம், தனம்; பன்னு நுதல் மதி யடியார் பரிபுரங் கொண்டு - துதிக்குங் கருத்தமைந்த அறிவுடைத் தொண்டர் பரித்த வுடலை ஆலயமாகக் கொண்டு, வியக்கும் மதியோலும் நெற்றியையும் அடியிலார்ந்த சிலம்பையுங்கொண்டு; இதழி - கொன்றை, இதழ்வினையுடையவாய்; பொன்னனைகு மலரவைசேர்ந்து இசைகொளரி மறையோதி புரிந்துதாழ - இலக்குமி வதியும் தாமரைத்தொகுதியை உறுபபாகக்கொண்டு புகழ்பெற்ற திருமாலும் மறையோதும் பிரமதேவரும் விரும்பிவணங்க,

மலர்ந்தகனகசபையிலமர்ந்து
ஓசைபாடும் வண்டுகள் மறை
ந்துள்ள கூந்தல் சுருண்டுதா
ழ; எனச்சிலேடைப் பொரு
ளாக்கிச் சிவபெருமானுக்கும்
அம்பிகையாருக்குங் கொள்க.
முதலடிக்கு, வல்லெங்கர்சகும்
அழகுமுதிர ஆபரணஞ் செ
றிய வளரும் தலத்துக்கு வார்
அளித்தென மாற்றிக் கோ
டலுமொன்று.

௫. சடைப்பிறை வல்லபையின்
நெற்றியை நிகர்த்தது, இப்
போது முகத்தை நிகர்ப்பச்
செய்வோமென்று தமது கோ
ட்டைப் பிறையோடுசேர்த்
து முழுமதியாக்கி நேயம்
வைத்த விநாயகர் என்க.

௬. பாகன் - பக்கத்தன், செலு
த்துவோன். வேங்கை-பெரு
ம்புலி, வேங்கைமரம். சொற்
போக்காற் றென்றும் நயப
பொருள்களை உய்த்துணர்க.

௭. உமைநேருநய் வாணிவடிவு
ம் நிகர்த்த வெள்ளிச்சிலம்பு.

௮. கண்களிற் கேட்குமவன் -
கண்களே காதாகவுடைய பா
ம்பு, (திருவாலங்காட்டில்புக
லடைந்த கார்க்கோடகனெ
ன்னும் பாம்பு.) கைகொடு
உயிர்ப்பவன் - விநாயகர்;
(கையே மூக்கும் உறுப்பெ
ன்பது).

௯. பங்கயாதனன்வெள்கல் - பி
ரமன் தான்படைத்த திலோ
த்தமையை மனைவியாகக்கொ
ள்ள மயங்கின நாணத்தைக்
குறித்தபடி.

௧௦. இருள் - அவித்யை.

௧௧. கன்று காமங் கழன்றிலர்
தம்முரு வென்றும் ஓர்வரி
தென்றிருப்போன் - சிவபெ
ருமான்.

௧௨. மாணிக்கவாசக ரென்னும்
தமது நாமத்தை வந்திப்பார்க்
குக் கொடுத்தலோடு தாமுந்
தரித்த அன்பர் என்க.
கொடை-மாணிக்கம்போலும்
வாசகத்தை அன்பரடையக்
கொடுத்தல்.

௧௩. அழிவின்றாகும் - அழிவு
இல்லையாகும். இது "நல்
லோர் பிறர்குற்றம் நாடார்
நலந்தெரிந்து—கல்லார் பிற
ர்குற்றங் காண்பரோ—அல்
லாத, என்போல்வா ரென்
னை யிகழ்வரோ வெண்கவிக்
குப்—பின்பாரோ காண்பார்
பிழை. என்ற ஔவையார்
பாடலை ஒப்பது.

௧௪. கடற்புகழ் - கடலளவுபுக
ழ். கூவம் - ஊர்ப்பெயர், கி
ணறு.

## ௧. நைமிசம்.

௧. அம்பு - நீர். ஒலி - காற்று.

௩. வந்தது-எதிர்நேர்ந்தது, காற்று. போகி - பாம்பு. பொறிப்பணம் - புள்ளிகளையுடைய படம், இந்திரியங்களாகிற பாம்பு. பாம்புகளுக்கும் யோகிகளுக்கும் சிலேடை.

௪. அங்கதம் - பாம்பு. சோம்பி - பச்சோந்தி. நவ்வி - மான், நவியென்றாயிற்று. ஒன்றுக கொன்று பகை என்பது காட்டும்.

௫. சோதிமாம் அழல்தப்பம். அகி - பாம்பு. சிவணல் - ஒத்தல்.

௬. தருணம் - புதுமை. சாதித்தல்-வெல்லல்.

௭. அசோகம்-சோகமின்மை. பிண்டி- அசோகு. மெய்பெறல்-சோகஞ் செய்யாமை என்பதை மெய்யாககல், (இதஞ் செய்தல்) வாரம்-மேன்மை.

௮ கிகிரிமரம் காம்பெனும் பெயரினைப் புதுக்கும். கிகிரி, காம்பு மூங்கில்.

௯. தாழை அணைந்துறுகின்றன புட்டினை ஒக்கும்.

௧௦. மாவினருகுறும் புன்னை; எழுவாய்.

௧௨. பாதவம் பூ உகுத்தல், மலர் மாரியின் மேவும்.

௧௩. எஃகம்-சூலம்.

௧௪. நந்தல்-குறைதல், வளர்தல்.

௧௫. இகம் தூறந்தூ.

௧௬. வலையம் ஆமர் வேய்-வலயங்களுடைய மூங்கில்.

௧௭. உன்னில் வல்ல தவம்; வல்ல-செய்யக்கூடிய. அற்றம்-சோர்வு.

௧௮. மண்டிதர் - அலங்கார முடையவர்.

௧௯. பயந்த-பயனையுடைய. முக்குற்றம் - ஆணவ மாயை கன்மம்.

௨௦. தம் செய்கையை ஓர் திரணம் இயற்றச் செய்விப்பர்.

௨௧. காதரவு-துன்பம். பூதரம்-மலை. (பூமியைத்தாங்குவது.)

௨௩. உசாவல்-வினவல். முதுக்குறைவு-பேரறிவு.

௨௪. தெரியின்-ஆராயின். உவ்வுடல்-அவ்வுடல்

௨௫. அனலம்-அக்கினி

௨௬. ஐம்பூதம்-மண்ணாதி. அன்று - பகை. அடல் - வெற்றி.

௨௭. பேருருக்கொள்ளல்-கரிமாசித்தி; அணுவெனக்குறுகல் - லகிமாசித்தி. விண்மிசை செல்லல் - பிராகாமியசித்தி. வியரிவிலாதுறல் - ஈசத்துவ சித்தி.

௨௮. தணிதல்-தங்கல்.

௨௯. வழக்கம் ஆம் - நன்னடை ஆகும்.

௩௦. இருமை-இம்மை மறுமை.

௩௧. பூதன்-சுத்தன்.

௩௩. அனகம்-பாபமின்மை. தானம்-தக்கார்க்கு நீரோடுதரும் பொருள்.

௩௪. தானி - தானஞ்செய்வோன். தரிபலர்-பகைஞர்.

௩௫. தூக்கல்-ஆராயல். அளிப்போனுக்கு பதம் மனையென ஆக்குற, அயன் மால் இமையவர் (தங்கருள்) மலைவார்.

௩௬. இல் - நன்மை, வீடு. மிருத்த ஆவி - எஞ்சிநின்றவுயிர்.

௩௭. கவிர்-முண்முருக்கு. கவி- அழகு, ஒளி.

௩௮. வாய்மை உறின், செய்தலிற்றலையாய், பதம்பெறும் படி, உயர்த்திடும். செய்தலின் - செய்தலைக்காட்டினும்.

௩௯. ஒலி - காற்று.

௪௦. இன்னல் - துன்பு.

௪௨. எழிலி - மேகம்.

௪௩. நிரயம் - நரகம்.

௪௫. எய்த்தல் - சோரல்.

௪௬. ஏர் ஒன்று துருவாசன்.

௪௭. பிறவினும் - மற்றையவற்றினும்.

௪௮. வேட்டல் - விரும்பல். வெறுக்கை - பொன்.

௪௯. கனல் குறுகில் சுடும், மற்றயைவற்றை நிரனிரை யாக்க.

௫௦. மேதகு - மேன்மை.

௫௧. வீற்றுவீற்று - தனித்தனி; வீறு - தனிமை. தெரியும் - ஆராயும். துனி இற - துன்பகல.

௫௨. வண் தவர் கண்டனர்.

௫௩. பொருக்கெனல் - விரைவுக்குறிப்பு. இருக்க என.

௫௪. அடிசில், மூரல் - உணவு.

௫௫. வல்ல- அறிந்த. யாவரும் - முனிவர் யாவரும். கல்விபும்செல்வமும் பெற்றன ஆம்.

௫௬. வாதராயணர் - வியாஸர்.

௫௭. கன்றல் - இரங்கல்.

௫௮. விஞ்சை - வித்தை, கருமஞானங்கள்சொல்நூல் - கருமகாண்டம் ஞானகாண்டமெனப் பிரிவுபட்ட மீமாஞ்சை.

௫௯. செல் நிகர்ப்பவர் - மேகம்போலும் விஷ்ணு. கனலி என்பேர்ச் சுடர்கள் - அக்னி சூரியன் என்பவர்.

௬௨. சச்சிதானந்தம் - உண்மை அறிவு ஆனந்தம். என்ப-என்றுசொல்வர்.

௬௩. அறமுடிப்பவரைத்தூர்ந்தவர் - அறமியற்றுவோரை ஒட்டும் பாவிகள். பாவத்துறைமுடிப்போர் - பாவகாரியங்களை இயற்றுவோர். நீற்று - கெடுத்து.

௬௪. மலம் வலியுக. புலி போற், ற. பாம்பின்-இன் எழுனுருபு. உகள் - தாவுகின்ற.

சுரு. ஓதி - ஞானம்.
சுசு. உவர் - நண்டுச்சிவம்.
சுஎ. நந்திஹும் - அழியினும். சீர்த்து-சிறப்பினையுடையது.
சுஅ. கேழ் - நிறம்.
சுகூ. கூபரம் - என்னும் வடமொழி கூவரம் எனத் தற்பவமாயிற்று.
எO. பன்றலையரவம் - பலதலைகளுடையசேடன்.

---

## உ. திருநந்தலம்.

க. முத்தளை - ஆணவம் மாயை கன்மமென்னும் பந்தம். பறிதல்-நீங்கல். சோதண்டமண்டிதர் - விற்கோலநாதர்.
உ. சாடி-நீர்ச்ஜாடி. நீத்தம்-நீர்ப்பெருக்கு. வான்மகள் போர்த்ததாமெனப் புயல்பரந்த.
ங. புழைக்கை-யானை.
ச. சிந்துரம் - யானை. நாகம் - மலை. சிகரி-சிகரம்.
ரு. கோடு-உச்சி.
சு. விடின்-விட்டால். வீழ்-விருப்பம். படி-ஒப்பு.
எ. காராவின்-காராம் பசுவைப்போல. அமுது-பால், நீர்.
அ. கோடு-கரை.
கூ. நீத்தம், கேதுக்கோள் சந்திரனென்று வாய் திறக்கும்படி பன்றியின் மருப்பை வானத்தில் எற்றும்.

கO. சுலவல் - சூழல். புலன்-இடம்.
கக. குங்குமங்கலந்தபுறம் சிவத்தையும், தாதுக்களை யளைந்தபுறம் உமையையும் ஒக்கும்.
கஉ. வில் திரை, நாண் வல்லி, அல்லிமுகை கணை.
ககூ. பெண்ணை சாய்த்து - பெண்ணையாற்றினைக்கீழாக்கி, பனைகளைத்தள்ளி. காவேரியினண்ணி - காவேரியினும் அதிகரித்து, சோலைகளோடு கலந்து. ஓதிமம் நன்குறவை கைசேர்ந்து-அன்னங்கள் நன்குகத்தங்குற இடமுடைத்தாகி, வைகையாற்றையொத்து. கம்பை இயைந்து - கம்பையாற்றை யொத்து, சங்கங்களைப் பெற்று. மணித்திரள் மண்ணி-மணிக் கூட்டங்களைக்கழுவி, மணிக்கூட்டத்தால் அலங்கரிக்கப்பெற்று. ஒத்தபடி முடிக்க. கம்பு-சங்கு.
கச. சிலம்பு-மலை, பாதச்சிலம்பு. சந்தம்-அழகு. திலகம்-மஞ்சாடி, பொட்டு. முன் நெற்றியிட்டு, முன் எற்றியிட்டு. பொலம்-அழகு, பொன். இடை-நடு, இடுப்பு. காஞ்சி-ஓர் மரம், ஒரணி. அகில் ஆரம், நகில் ஆரம். வளை-சங்கு, கைவளை. கை-பக்கம், கரம். பணி-பாம்பு, ஆபரணம். அள

கம்-நீர், கூந்தல். சிலேடைப் பொருள்காண்க. நகில் - தனம்.

கரு. சேடு-அழகு. மார்த்தாண்டன்-சூரியன். பாகன்-அருணனெனும்பாகன்.

கசு. துருக்கம்-கஸ்தூரி. மாக்கள்-விலங்கு, மனிதர்.

கஎ. மண்ணுறுப்பு-கழுவி.

கஅ. கண்டோர ஆடுநர் உட்கொண்டோர்கள், முறைநேய திரிமூர்த்திகளின் பதவிகளையடைவரெனபது.

ககூ. கூடங்கு-அகழி. கப்பண்-பாலுகப்பண். கைகளின் - கைகளைப்போல. கால்கள் - வாய்க்கால்கள். நிவத்தல்-ஓங்கல்.

உ0. சிலம்பு - மலை, ஒலித்தல், காற்சிலம்பு. இயம - ஈண்டு மருதப்பறை. நாஞ்சில்-ஏர். சால்-படைச்சால்.

உக. அங்கு உரப்பி உந்தி. உரப்பல்-ஒலியிடல். பணை - வயல். எகினம்-அன்னம். சங்கினை அணடம்யன்ன எடுத்துவிடுப்பவீழ்வது மதி தவறவிழுவதை ஒக்கும் என்க.

உஉ. இரியல்போக - ஓடிப்போக. தொத்து-கொத்து. கமலச்செப்பு-கமலமாகியகிண்ணம். இழுது-கொழுமை.

உங. முளரி குமுதம் நீலம்,எதிர் நிரனிறை. முரணல்-மாறுபடல். வளை-சங்கு, வளையல்.

உச. எம்முறையில்-என்னைது வில். எம் உறை இல்.

உரு. அவை-அத்தாமரைகள்.

உசு. ஓர் இலை வளையப்பெற்றுக் கதிர்நிமிர்ந்து நிற்றல், அங்குசத்துக்கு உவமை.

உஎ. உராய்-நெருங்கி. கருப்பகடு-எருமை.

ஙo. பலாலம்-வைக்கோல். உலவை-காற்று. பதடி-பதர். இங்கூறு-தென்புலத்தார்தெய்வம் விருந்தொக்கல் தான் என்று திருக்குறளுட் கூறியவை.

ஙக. வாவி காட்டும். பிரிந்த-உடலிற்பிரிந்த. அளகம் காது முதலிய வற்றை சைவலம் வள்ளை முதலியவற்றோடு ஒப்பிடுக. கண்ணி-மொட்டு.

ஙஉ. வான் மதியம் கமல அழகைச் சிதைக்கும். தடத்தபரந்த.

ஙங. பாசடை-பசிய

ஙச. ஆவி ஆடுகின்றன - குளம் (நீர்) ஆடப்படுகின்றன.

ஙரு. மாதர் ஆழ்வார்.

ஙசு. வனிதையர் மூழ்கி கைகாட்டி (அன்னத்தைப்)பிடிப்பார்.

ஙஎ. மதிமுகத்தி தாமரைமுகத்தியை அலைக்கும் என மு

றையாகப் பகைப் பொருளை ஒப்பிட்டது நயம். குடைதல்-நீராடல்.

௩அ. ஏமம்-பொன். ஞாங்கர்-பக்கம். கொன்-பெருமை.

௩௯. வம்பு-பெருமை, மூலைக்கச்சு. யானை என்றது தனங்களை. கம்பம்- சிவம், கம்பை நதி யுமாம்.

௪0. வேரம் மேகம், மதுலுறப்புமாம்.

௪உ. சிகரி-கோபுரம். பொறி - இலக்குமி.

௪௩. சேக்கை-சயனம்.

௪௪. மணிதழைப்ப,அணிதழைப்ப. நிரைகடும் - வரிசைபடுத்தும். நிகழ்தல்-தங்கல். அரச்கு-செவ்வப்பு. வய்த்தல் - ஒத்தல்.

௪௫. சிகைரம்-கோயில்.

௪௬. தரிசனத்திற்கு மன்மதனோடு வந்த இரதியை, மைந்தர் கண்டு தனியளாய் வந்தவள் யார் என்று வினவ மகளிர் ஊடினர் என்க.

௪அ. பயம் - பழம் பால் நீர் அச்சம். இப்பொருள்களைத் தருமுதலியற்றிற்கு முறையேகூட்டுக. சிந்து - கடல்.

௪௯. பாகசாதனன் பதம் - இந்திரன்பதவி.

௫0. கூவரம் - ஏர்க்கால். ஏர்க்காலோடு ஆரையும் அச்சையும் ஒருங்கு சேர்த்து ஒடித்தனராகலின், ஆரையொடித்தனர், அச்சையொடித்தனா என்பர் பின்னும்.

௫உ. ஆதி - சிவம். வயிரவாகாரை -பயங்கர மான வுருவத்தை யுடையவள்.

௫௩. காங்கேயன் என்பது குறுகிநின்றது.
தக்கற்காதி - வீரபத்திரர்.
கூர்மாண்டன் - கூஷ்மாண்டன் என்பதன் சிதைவு.
காரி - ஐயனார்.

௫௪. அற்று - அத்தன்மைத்து.

௫௬. மறம் - பாவம்.

௫எ. கற்பவீற்றில் - கற்பகால முடிவில். கூவம் - நகரநாமம், கிணறு.

௫௯. அவற்றால் - அந்தக் காசியாதி தலங்களால்.

௬0. சுகாதனம் - யோகாஸனத் தொன்று. நடையே வலம்வரல்போன்றது; மற்றதை இப்படியே கொள்க.

௬௧. நொய்து - அற்பம்.

௬உ. பதாயுதம் - கோழி. கரம்-கழுதை. கொடி - காக்கை.

௬௫. கன்னல் - நாழிகை.

௬எ. வில்மண்டிதர் - வில்லழகர். கணிப்பு - கணக்கு.

௬அ. கின்னரம்-கின்னரபபக்ஷி. அரம்பேசன்-இப்பெருமான்

அரம்பையராற்பூசிக்கப்பெற்றவர். இப்பதி இலம்பையங்கோட்டூர் எனப்படும். கூவத்திற்கு அடுத்துள்ளது. ரம்பா என்னும் வடமொழி லம்பாஎன்றாகித் தமிழ்விதிப்படி மொழிமுதற்கண் இகரம்பெற்று,ஆவீறு ஐகாரமாய்நிற்க; கோட்டூர்என்னும் ஊர்ப்பெயர் சேருங்கால், அம்முச்சாரியைபெற்று, இலம்பையங்கோட்டூர் என்றாயது. இதன் தேவாரத்தை முன்னர் நோக்குக.

கூகூ. குணதிசை - கீழ்த்திசை. முனிவர்-கண்ணுவர். இலிங்கம் ஈயும் என்க.

எ0. அம்பு-அம்பு, ஜலம்.

எக. இறுத்தல் - ஒடித்தல். நீராய் - ஜலமாய், தன்மையாய்.

எங. பிரசாபதி -சூரியன். தானங்களென்றனை பதமுத்திகள். முத்தி-பதிமுத்தி.

எச செங்கதிர்நாள் - ஆதிவாரம். உவா-அமாவாசை பௌர்ணிமை.

எரு. கண்ணிறைந்த-பெரிய.

எஎ. நன்றி-நன்மை.

எஅ. இவர்தல்-ஏறுதல். ஆர்-சக்கரத்திற்கோத்த இலைகள். என்னுக்கு-யாதுக்கு.

---

ங. திரிபுரம்.

க. தாலம்-உலகம். முக்குற்றம்-காமம் வெகுளி மயக்கம்.

உ. பேருகம்-பெரியயுகம். தாருகன்-தாரகன் என்பது எதுகைநோக்கித் தாருகன் என நின்றது. சட்டகம் - உடல்.

ங. துய்த்தல்-உண்ணல்; துய்த்தலற்றவர்க்கு அன்னமும், கரகநீருங்கொண்டு பிரமன் வந்தானென்பது நயம்.

ச. நவிற்றி - செய்து.

ரு. எயில்-மதில். மேவலர்-பகைவர்.

கூ. ஆடல் -விளையாடல், போர். ஒருங்குற-ஒன்றாக.

எ. அற்று-அத்தன்மைத்து. இஞ்சி-மதில். அயம்-இரும்பு.

கூ. தெற்றி-சித்திரக்கூடம். சேவகம் - யானைக்கூடம். ஆவணம்-கடைச்சாலை, தண்டலை - சோலை. மயன் அசுரதச்சன்.

க0. செவ்விது-செவ்வையது.

கக. செறுநர்-பகைவர். எல் - ஒளி, கீர்த்தி.

கஉ. செல்லல்-வெறுப்பு. செயிர்-கோபம்.

கங. பூசியா-பூசியாமல்.

கரு. இருள்-மையல்.

கசு. துறக்கம்-தேவருலகு.

கஎ. மிஞிறு-வண்டு. போழ்தல்-கிண்டல். புலர்தல் - வாடல். வாழ்ந்து-மகிழ்ந்து.

கஅ. பொலம்-பொன்.

கக. காண்-அழகு. சூழ்ச்சி - ஆராய்வு.

உக. மாதிரம் - திக்கு. கேடுசூழ்ந்து-கேடுசெய்ய நினைத்து.

உங. கணிப்பு-கணித்தல்.

உச. வறியன்-வறியனாய்.

உரு. கொடி - காக்கை. சிங்கல்-அழிதல். அரையன்-அரசன்.

உகூ. நலிந்து-நலிவுகொண்டு.

ஙo. நோன்மை - வலிமையால். அன்றல்-பகைத்தல்.

ஙக. பாரதி - சரஸ்வதி, மரக்கலம்.

ஙஉ. அடைகள் மூய - இலைகள் படர்ந்த. விழியுடற் கடவுள் - விழிகளையுடலிலுடைய இந்திரனே!.

ஙங. அன்னோர் - தேவரென்றபடி. திருவிழுந்து உழக்குமாறு இயம்பி.

ஙச. உபசத்துக்கள்-ஒருவகைமந்திரங்கள்; இங்கே அவை அந்தயந்திரங்களின் அதிஷ்டான தேவதைகளை உணர்த்தின. அனையர் - அம்மந்திர தேவதைகள்.

ஙஅ. அமருரும் - வருத்தும், வசிக்கும்.

ஙகூ. செல் - இடி. சிந்தச் சிந்தினர்.

சo. வென்னிட - முதுகைக் காட்ட, தோற்க.

சக. இரியல்-தோற்றல்.

சஉ. மாயவன் நினைந்து சொல்வான்.

சங. துன்னவக்கிரகம்.- துர்நவக்கிரகம். காவர் - வஞ்சர்.

சச. தாவு-குற்றம்.

சரு. சாதனம் - அடையாளம். போதம்-அறிவு.

சஎ. பொன்றும் மாறும் - அழியும் அழிவுநீங்கும்.

சஅ. இழைத்தலோ - செய்தன் மாத்திரமோ ?

ருக. குத்திரம்-வஞ்சகம். அத்திறத்தினும் - அக்காரணத்தானும்.

ருஉ. புணர்ப்பு - மாயம். சாரண (விளி.)

ருங. அவை-சபை. மாயைமுதல் -விட்டுணு. புத்த வடிவோடு நூல்கொண்டு வருவான்.

ருச. விஷ்ணு, புத்தன் அருகன் ஜினன் என்ன மூவருக்கொண்டு முப்புரத்துட் சென்றனர் என்பது கருத்து. நூல் அறைகின்ற காலை. மணி-உருத்திராக்கம்.

ருரு. உடம்பு கங்குல் புரையும்.

ருஎ. முனிமாதவன் ஆயிடை ஆர்வம் முகிழ்க்க வந்து மாயையின் நண்ணியவாறு உன்னி மாகர், தானவர் இன்றோடு இனி மாய்குவர் எனு உவப்ப உரைத்தனர். முகிழ்க்க - தோன்ற. வரா - வந்து.

ருஅ. உம்பர் பாடுவேர். நக்கு - சிரித்து. உக்கார்-கெட்டனர்.

ருகூ. வம்பின் - வாரும்.

சூ0. நாரணன் வரும்.

சூக. தற்கம்-(சந்திரனுகிய) தன்னைச் சிரசில்; கம்-சிரம்.

சூஉ. வருணம்-நிறம். தவிசா-ஆசனமாக. திரணமொத்த திருவன் - நொய்மையனை விஷ்ணு. பரிணமித்தல் - ஒன்று ஒன்ருகமாறல். பண்பு அன்னது-பண்பினை ஒத்தது.

சூஅ. இறை - சிறுபொழுது. சிறை-அணை.

எக. உண்மை யாகிய (நித்திய லட்சணத்திற்) றிரிவின்றி அருளுருவுகொண்டு.

எங. சாலம்-கூட்டம்.

எச. அரு - நாதம் விந்து சத்தி சிவம்; உரு-பிரமன் விஷ்ணு ருத்திரன் மகேசுரன்; அருவுரு-சதாசிவம். சத்தி-பராசத்தி ஆதிசத்தி இச்சாசத்தி கிரியாசத்தி ஞானசத்தி.

எசூ. விண்ணோர் (எழுவாய்.)

எஎ. அனர்-துன்பு.

எஅ. கலம்புடை சுழலும் காகம். கலம்-மரக்கலம்.

அ0. ஆடல்-திருவிளையாடல்.

அக. ஏனைப் புராணங்கள் தழல் வாயு மால் என்னும் மூவரும் சரமாயினர் எனக்கூறின வேனும், இவ்வடமொழிப் புராணம் வாயுவைக் கூறுது சந்திரனையே கூறுகின்றது.

அஉ. அணக்கல்-அச்சுறுத்தல்.

அங. நாண்-கயிறு, நாணம்.

அசூ. தன்மகன்-பிரமன், அவன் மகன் - காசிபன், அவன் மகன்- சூரியன்; ஆகலின், சூரியனைத் தன்மகன் பேரனெனவும்; பாற்கடலிற் சீதேவியோடு சனித்தமையால், சந்திரனைத் தனக்கு மைத்துனன் எனவும் விதந்தார்.

அஅ. துணங்கை - கைகோத்தாடல். ஆசை-திசை.

அகூ. நிலைபிரிந்த மயிருக்கு இழிவிருக்கவும், அது தனக்கின்மையால், கவரி தலைவிரித்தாடின தென்க.

கூ0. மாசுணம் கதிர்கவ்வி ஈசனுரு நாகங்கட்கு ஈந்திட நீட்டி மோசம் இழைக்கலுற்ற, முறைமைபோல. (ஆலவட்டத்தில் சூரிய சந்திரர்களி

னுருவமைத்தலும் வீசுங்கால் திருகிவீசலும் இயல்பு.)

கூக. சச்சரி-கைத்தாளம். தடாரி -பம்பை.

கூரு. கஞ்சுகம் சட்டை. பாரிடம் -பூதம் . தோள் வீங்க.

கூச. துண்டம் - மூக்கு. சொல் சொல்வ.

கூடு. மண்டலஆடி-சூரியன்.

கூசு. எற்கு - எனக்கு. ஒத்தவர்-தம்மை யொத்தவர்.

கூஎ. பண்-பண்பு. பரிசின்-தன் மைபோல்.

கூஅ. உட்க-பயப்பட.

கூகூ. கவிகை ஒங்கி நிகழ்ந்த.

க0ரு. தங்கு அப்போது. ஆர் - அச்சு. சிங்க-அழிய.

க0ச. வையம்-தேர்.

க0டு. ஒட்டலர்-பகைவர்.

கக்க. அரி- சேனை.

ககஉ. கோதண்டம் இட்டும், சரம் வலமும் கொண்டு. வை-கூர்மை.

ககரு. நன்றின்-விருப்பத்தோடு.

ககச. நீறு - விபூதி, அழிதல்.

ககடு. சார் - சார்வு, (இடம்.)

ககசு. அளி - வண்டு.

ககக சிலீமுகம் - பாணம்.

கஉ0. குணவுரு அணை - நாணு கிய உருவுடைய சயனம். பாம்பென்றபடி. அப்பு -அம்பு. சிலை வாசிகைபோன்றது.

கஉஉ. விசிகம், புங்கம்-பாணம். முன் - மார்பு.

கஉரு. சம்பு - நரி.

கஉச. இகலன்-நரி.

கஉடு. சாடியது ஒத்தது. ஓதனம், பதம் - அன்னம்.

கஉசு. மருள் - விபரீதவுணர்வு. இருள்-அவித்யை.

கஉஎ. செப்பு-சிமிள். அப்புரம்-அந்தச்சரீரம்.

கஉஅ. முகிலினம்-(தாப்பிசை).

---

### ச. சந்தானகிரி.

ரு. கரவாட் போக்கல் - கரத்தின் வாளை ஒளித்து வைத்திருந்து பகைவர்மேல் வஞ்சகத்தாற் றாக்கல்.

அ. புண்டரிகம்-புலி.

கஉ. சத்திபாதம்- சத்திபதிதல்.

கசு. தோற்றம் விளிவு - பிறப்பு இறப்பு.

கஎ. பாசவிலக்கணம் ஐங்கூறு படும்; அவற்றில் ஆணவமலத்தின் இலக்கணங் கூறியபடி. பிறழ்தல் - விளங்கல்.

கஅ. முற்கூறிய ஐங்கூறில் மாயாமலம், சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை என முத்திறப்படுதலும், தத்துவம் முப்பத்தாறனுள் ஐந்து சுத்தமாயும், ஏழு, சுத்தாசுத்தமாயும், இருபத்திநான்கு

அசுத்தமாயும் இருக்கு மென்பதும், அவை, பிரேரம் போக்கியம் போகம் என்ன மூக் காண்டமா மென்பதும் கூறியவாறு. பகுதி - பிரகிருதி. பிரேரம் - ஏது. போக்கியம் - அநுபவப் பொருள்கள். போகம் - அநுபவம். காண்டம் - கூட்டம்.

௧௯. முற்கூறிய ஐங்கூறில் கன்மமலத்தைக் கூறியபடி. சஞ்சிதாதி - சஞ்சிதம் பிராரப்தம் ஆகாமியம்.

௨௧. சொல்லாதசொல் - குறிப்பு, அது சின்முத்திரை என்பர்.

௨௨. அயனுக்குப்புஷ்பகிரியில்.

---

## ௫. அடிமுடி.

௨. துஞ்சல் - தூங்கல். அந்தணர் - பிரமபதவிபெற்ற முனிவர். அங்கத்தின்மான் - கலாரூபமான சரஸ்வதி.

௩. வாகம் - அழகு; திகழ்வு ஆகம் ஒன்றுறு மேகம் - விளங்கும் சரீரத்தைப் பெற்ற மேகம்.

௪. மாலான் - மயங்கிய பிரமன். மால - மயங்க. நீரின்பாலா - நீரினிடமாக.

௫. வில் - காந்தி.

௭. உக்க - சிந்த.

௮. வலத்தின் - வல்லமையால். முட்டுற்று - தாக்கி. வட்டணை - வட்டம்.

௰. நாகர் - தேவர். ஒலி - காற்று.

௧௧. என்றூழ் - சூரியன். சமழ்ந்து - மயங்கி. புரை - குற்றம்.

௧௨. உரம் - மார்பு. வயின் - வயிறு. வாள்நாடுறும் - வாளை ஒக்கும்.

௧௩. இகத்தல் - கடத்தல்.

௧௪. மேதை - மேன்மை.

௧௫. தாணு - ஸ்தாணம், சலனமில்லாது ஆதாரமாய் நிற்பது. கம்கரன் - கபாலகரன்.

௧௭. ஏருபு - ஏகி. போனமூதறிவு - அறிவில்லாமை.

௧௮. கன்றி - விரும்பி.

௧௯. விலங்கு - மிருகம், விலங்கு.

௨௪. இட்டம் ஒன்றிலர் - இஷ்டபூர்த்தியடைந்தாரிலர். பூப்பட்டகண்ணினர். பட்ட - ஒத்த, ஆகிய; கண் - கண், இடம்; விஷ்ணுபிரமருக்குக் கொள்க.

௨௫. தமை - தங்களை.

௨௮. நீலகண்டமும் சிரமாலையும் தமக்கு இன்னல் நேர்ந்த காலத்தில் தரித்த திருக்கோலமாதலால், அவற்றைக் கண்டு நாணுற்றாரெனக.

௩௦. வெம்மைநீரென - வெந்நீரென. இது, வெம்மை நீருக்கு வேறாகாமைக்குக் காட்டும் உதாரணம்.

ங௯. நந்தி - குறைந்து.

௪௦. 1. இரக்ஷகர். 2. தியாகர். 3. சந்ததாரர்-அடியவர்களைச் சமுசாரபயத்தினீக்கி நன்கு காத்தவர். 4. வளர்சடைக்கூத்தர் - தீர்க்கஜடாநிருத்தர், நீர்க்கம் - நீட்சி. 5. ஜகநாதர் - சர்வகர்த்தா. 6. அஞ்சநாபகண்டர் - விடத்தால்அஞ்சனம் போலும் காந்திபெற்ற கண்டத்தையுடையவர். 7. கிலாநிக்னர் - கலிகாலகிலேசத்தை நீக்கியருளினவர், கிலானி - கிலேசம். 8. புவனநாயகர் - அசுரர்களை மாய்த்துப் புவனங்களைக்காத்தவர். 9. திரிபுரக்நர்-திரிபுரத்தை யழித்தவர். 10. அபபிரதிஷ்டர்- பிரதிஷ்டையல்லாதவர். எனவே, சுயம்பு. 11. கூவநாதர் - கூபநாதர். 12. செந்நெல்வைத்தவர் - நிவாரதர், நிவாரம் - செந்நெல். அன்றியும், அபபிரதிஷ்டர் என்னும் திருநாமத்தை அப்பிரதிஷ்டா - அந்நியதாகர்த்தா எனப் பாடமோதி, அதற்கு, தம்மையடைந்தவர்கட்கு அளித்த பதத்தை என்றும் அகற்றாதவரெனவும்,பொருள்கொள்வர்.

---

## ௩. செந்நெல்.

௨. முக்குறும்பு - காமம், வெகுளி, மயக்கம். பொய்யை மெய்யினிற்காணல் - நித்திய வஸ்துவின் விவேகத்தால் அநித்ய வஸ்துவின் நிலைமையை உணரல். அடியர்கட்டிசுழ்த்தல்-அடியரிடமாகககாட்டல்.

௫. புழுக்கல் - அன்னம்.

௬. தன கற்பினளவலாது அழகு ஒழுகும- கற்பினளவேயன்றி யதனினும் மேம்பட்ட அழகென்றபடி.

௭. நெற்பலி - நெற்பிச்சை.

௮. எய்த்து - சோர்ந்து.

௧௦. அம் மனை - அழகியவீடு.

௧௨. துவ்வு - உணவு.

௧௪. மும்மை - மூன்றுபங்கு.

௧௬. நனை - தேன்.

௧௭. இரண்டு நாழி எய்த.

௧௯. நூக்க - செலுத்த.

௨௦. போனகம் என்பது போனம் எனத் தொக்கது.

௨௧. மருந்தெதிர்பவரின்- அமுதத்தை எதிர்கண்டவர்போல.

௨௨. பதம் - தன்மை.

௨௩. தந்தமா - யானை.

௨௪. அம்மையேயென்று தாம் விதந்து கூறிய காரைக்காலம்மையாருக்கு இவர் பிள்ளையென்றல் மெய்ம்மையே என்று கருதும்படி அவர் போல் இளைத்த எலும்பு வடிவு கொண்டு.

௨௫. விற்கோலத்தன்- வில்லழகன், வில்லைப்போற் கூனினவன்.

உ௬. பதம் - உணவு, பதவி.

உ௯. நிட்டை - உறுதி.

௩0. வைத்தும் - வைப்போம்.

௩௬. பிரதோஷசந்தியில் நிருத்தஞ்செய்தன ராதலாற் கைலையிற்செய்த நடனம் சந்தியா நிருத்தமென லாயிற்று. இரக்காநடனம்—இரக்ஷாநடனம்.

௩௯. அடிசில், ஓதனம் - அன்னம்.

௪0. மடம் - துறவிகளாலயம், மடமை.

௪க. இழை - நூலிழை. பெற்றம் - இடபம்.

---

எ. தாருகன்.

௪. செம்புனல் துளி-இரத்தத்துளி. சாண்-காணத்தகும். கடுத்தல், தன்போலுருவு கொள்ளல்.

ரு. எண்திசையரையர் - அட்டதிக்பாலர். வயம் - வெற்றி.

௬. திசையுறுகரி - ஐராவதமுதலிய யானைகள்.

எ. இரவியின் ஒத்த தேர்க்கிளிளையாகிய ஏழ் (ஸப்தமா) கிள்ளைகள்மீது; ஒத்தல்-ஒன்றுக்கொன்று சமமாதல். கிள்ளை - குதிரை. ஞெள்ளல் - வீதி.

அ. எற்றல் - வீசல். சிலம்பு - மலை.

௯. வான் நிதி நந்து தாமரை - தேவநிதியாகிய சங்கநிதி பதுமநிதிகள். தேனு(தனது) பசுக்கூட்டத்துள் ஒன்றாயிருக்க.

க0. தாருகன் அணிகள், மேருவின் பொன்னாலும் சேடனுடைய மணியாலும் ஆக்கப்பட்டன.

கக. அணக்கி-வருத்தி. அணங்கியர் என்ற பெயருக்குக் காரணங் கற்பித்தபடி.

கஉ. தன் அவையில் அராவிறையையே தீபமாக வைத்தனன்.

க௩. கொல் - கொல்லன் என்னும் பொருளது. வல்லி - விலங்கு.

க௪. இனைவுறல் - வருந்தல்.

உக. தருணம் - இளமை. வாரணபகை - சிங்கம்.

உரு. பொன்றிகழ்மரை - பொற்றாமரை.

உஎ. அமரர் - இறவாதவர்.

௩0. நச்சினை மிடற்றடக்காவழி, திருமாலும் அயன் முதலிய தேவரும் இறத்தலை யுடையராக; அச்சுதன் அமரர் என்னும் அவர்கள் நாமங்கள் அகரத்தை யிழந்து, முறையே சுதனெனநின்று அழிதலையுடையவனெனவும், மரரெனநின்று மரித்தலையுடையவ

ரெனவும், பொருள்பட்டு நிற்குமாகலின், முதலெழுத் திகவாதொன்ற நச்சினை மிட ற்றடக்குநாதன் என்றுவிதந் தார்.

௬க. மறவன் - வீரன்.

௬௩. சின்மய தேவி என்க.

௬௪. குழை தாவு கண், கழு முள்-சூலம்.

௬௫. இயல்பு என - இயல்பு போல.

௬௭. மை நகம் - நீலமலை. வடு கன் - வைரவர்.

௭க. சமீரணன் - காற்று.

௭௩. படைத்தவ (விளி).

௭௫. காரிபட்ட - விடமொத்த. மாரி - மேகம்.

௭௭. நுனித்த - சுருக்கமான.

௫௦. அனீகம்-சேனே. யோகினி - காளியின் ஏவற் பெண்.

௫க. அ குமாரி.

௫௫. இருகான் மாறி சுழன்று டினர்.

௫அ. கம்மியன் - கம்மாளன்.

௬௦. வலவி - தேரோட்டுவாள்.

௬க. தடத்த - வெளியான.

௬௨. பதலை - முரஜம். இறலை - பறை.

௬௩. இ கு - இந்தப்பூமி. புக்கு ரூர் - ஈண்டுத்தேவர்.

௬௫. சூலி எழுந்து அடைந் தாள்.

௬அ. சீற்றமாம் - கனல்.

எக. புருவி - புருவத்தையுடை யவள்.

எ௩. நின்றிடும்படி அன்று ஆற் றும் ; அன்று - பகை.

எ௫. மின்-மின்னலோடுகூடிய இடி. மன் - இந்திரன்.

அ0. ஒற்றினிர் - ஒற்றியுணர்ந் தவரே.

அ௩. ஒலி - ஆயுதம். சும்மை கொள் - சுமையாகக்கொள் கின்ற, விரித்தல் விகாரம்.

அ௫. எயினர் - எவினர்.

அஎ. அங்கியை போர்த்தான். வெரின் - முதுகு.

அஅ. கோதை - முன்கைத்தோ ல். விரற்புட்டில் - விரற்கவ சம். புங்கவம் - மேன்மை.

அ௯. தெம் - பகை.

௯க. செங்நெற்சூடு - செங்நெற் குவியல்.

௯௨. அமர் இல் துன்பம்.

௯௪. கற்பு இல் மாதர்.

௯௫. உலம் - திரணடகல், மலே.

௯எ. ஐய- உடன்பாடுணர்த்தும் குறிப்பு மொழி. மத்திகை - குதிரைச்சம்மட்டி.

௯அ. கோடிகம் - தட்டு. களாஞ் சி - படிகம். விழிக்குறி - சைகை. ஈ யோட்டிபோலச் சாமரைவீச.

௯௯. போழ் - பிளவு.

க00. படிமகள் படர்வதென்னப் பூப்பொடி போயிற்று.

௧௦௧. பூழிமாலை குடையடைந்து தடுக்கப்பெற்றன. மாலை - வரிசை.

௧௦௨. பொருநர் - போர்வீரர்.

௧௦௩. இயவர் - வாத்தியக்காரர். சிலம்பல் - ஒலித்தல். அழுமோசை அடுக்கடுக்காய்க்கூடி எதிர்ந்தெழுதல்போல. உம் அசை.

௧௦௬. கழு - சூலம்.

௧௦௭. தோமரம்-இருப்புலக்கை.

௧௦௯. கொடுமரம் - வில். மும்மை - மூன்று.

௧௧௦. ஆற்றின - ஆற்றைபபோல. உலத்தல் - சாதல்.

௧௧௫. கொக்கு - மாமரம்.

௧௧௮. அதிர்உறும - குமுறும்.

௧௧௯. அயுதம் - பதினாயிரம்.

௧௨௦. வண்டு - பாணம்.

௧௨௨. புரம் - உடல்.

௧௨௩. உங்கு - அங்கு.

௧௨௪. வீரக்கு - வீரத்துக்கு.

௧௨௭. பரிதி-சூரியன், சக்கரம்.

௧௨௯. கிரி என்னும் மூன்றெழுத்துள் ஆதியாகிய ஓரெழுத்து ஒழியில் பகரப்படும் பெயர் கிரி; (மலை.)

௧௩௧. மொய் - பொருகளம்.

௧௩௨. மந்திரக்கிழமையோன் - ஆலோசனை கர்த்தன். (மந்திரி.) குரவை - கைகோத்தாடல்.

௧௩௩. தானமா - யானை.

௧௩௪. பன்னல் - பருத்தி.

௧௩௫. சூள்-வீரவாதம். கறங்கு - காற்றாடி.

௧௩௬. உடம்பிடி - வேல்.

௧௩௭. களேபரம் - பிணம்.

௧௩௮. இகலன் - பெருநரி.

௧௪௦. சளத்துள் பேரியாதிய.

௧௪௧. போர்வைநீங்கும்பணை தோலற்றபறை.

௧௪௨. மனை - மனைவி.

௧௪௫. கலினம் - சேணம்.

௧௪௭. வசி - வாள்.

௧௪௮. வாள் (அதில்) உற்று சிறிதேனும் அற்றிடாது.

௧௫௦. ஓவற - நீங்காது.

௧௫௧. மறந்து - அழிந்து.

௧௫௩. கடி - நிதம்பம்.

௧௫௮. கடம்-காடு. உழி-இடம்.

௧௫௯. பல்நிரை - பல்வரிசை. கந்தரம் - சிரம்.

௧௬௦. கழுது - பேய். கவந்தம் - தலையற்ற குறையுடல்.

௧௬௩. சிந்துபு - சிந்தி, ஓடி. மானவப்படை - வீரபபடை.

௧௬௪. புஞ்சம் - கூட்டம்.

௧௬௫. அடங்கலர் - பகைஞர்.

௧௬௯. நழுவின் - நழுவலாலே. ஒடுவான்-ஓடக்கருதி. சிறிது உறு - சிறிதுற்று.

௧௭௦. பின்றல் - பிறபடல்.

௧௭௨. வயின் - வயிறு.

கஎ௬. ஆசுகங்கள் அவுணர் புக ழையறுத்தன புரைய, குடையை அறுத்த.

கஎ௬. கைச்சாபங் கொண்டு வாய்ச்சாபம் மாற்றினன் போல், சாபம் - வில், வீரவாதம்.

கஎஎ. பணை - பறை. கறை - இரத்தம்.

கஎ௬. குடையைப் பிடித்திருந்தவர் குடையறுபட, அக்காம்பைப பற்றியிருக்கில் படையென்றுகருதித் தெறுவானென்று படியில்விட்டார். சிலர் அறுபட்ட குடையைக் காம்பிற் செருகிப பிடித்தார்.

கஅ0. அது பிடிஇ - அக்(குதிரையைப) பிடித்து. புல்லே வாயிற் கொள்ளல் தோற்ற குறிப்பு.

கஅக. வாங்கிய - வளைத்த. எங்கல் - ஒலித்தல்.

கஅ௨. உயங்கல் - வாடல். கழிதல்-மிகுதல், போதல்.

கஅ௩. நன்னர் இல்.

கஅஎ. பிணைமடங்கல் - பெண் சிங்கம்.

ககக. கார்முகம் - மேகம், வில்.

கக௨. குணம் - நாணி, குணம்.

கக௩. அடிவிரல் தேர்த்தட்டில் முன்னும் பின்னும் தாங்கத் துடைமடக்கி நிற்கும் நிலே, ஆலீடம் பிரத்யாலீடம் என்னும் யுத்தநிலையைக் குறிக்கும்.

கக௬. வலவி அழிந்திடக் காளி கார்முகத்தைத் துணித்தாள்.

ககஎ. நச்சு நிலே பகழி.

ககஅ. ஈர்ம்பகழி - கூரியபாணம், ஈர்மை - குளிர்மை.

௨00. மாகர்-தேவர். செங்கேழ் ஆகரம் - செந்நிறத்திற்கிடமான மணி.

௨0௨. கொறில் - விரைவு. தினமணி - சூரியன். அம்புகித் திரையினர், திரை-ஆகுபெயராய் அமுதத்தை யுணர்த்திற்று.

௨0௩. தெற்றல் - பின்னுதல்.

௨0௪. அடலே - சாம்பர்.

௨0௫. ஊழ் - பழமை.

௨0௬. வை - கூர்மை.

௨0அ. மால் நல் போனகம் - விஷ்ணுவுக்குணவாகிய பூமி.

௨க0. பவ்வமன்னவன் - சமுத்திரவரசன் (வருணன்.)

௨க௨. சூல் - சருப்பம். ஒலி - காற்று.

௨க௩. விண்ணின்கா - கற்பகம். பூ - அழகு.

௨க௪. கலுழபபடை-கருடாஸ்த்திரம்.

௨கஎ. இமில் - முசுப்பு. கட்டு அழல் தூர்க்கும்படி வாயினீர்க்காட்ட. மருத்தை நாசியும், தீயை விழியும் காட்ட.

௨௧௮. மருப்பு, எறிய உரியதி லாமையின் (வாளா)இருப்ப. உரியதிலாமை - தாக்குதற் குரிய பொருளில்லாமை.

௨௧௯. தனை - கருடனை. வந் தனைசெய்து விடுத்தான்.

௨௨௩. உடலல் - வருந்தல்.

௨௨௫. பொற்பிறங்கல் - மேரு.

௨௩௩. மா வஞ்சனி - பெரிய யோகினி.

௨௩௫. உத்தாரம் - ஊழித்தீ.

௨௩௬. உதவகன் - அக்கினி.

௨௩௯. நங்கி - உண்டு.

௨௪௧. அனிகம் - சண்டிக்காளி சேனைகள்.

௨௪௫. குலாலன் - குயவன்.

௨௪௭. வீழ்ந்த தலைகளைப் பல வாக எடுத்து. இக்கூத்து துணங்கை என்பது.

௨௪௮. அங்குலி - விரல். சுவ ரு -பலகறை.

௨௪௯. மத்தகர் - மதத்தர்.

௨௫௦. மத்தநாகம் - மதயானை.

௨௫௧. அரவம் - ஓசை.

௨௫௩. பரம் - பாரம். கம்-தலை.

௨௫௫. காலிற்றைத்த முள்ளைப் பிடுங்கி முளையை அடித்தாற் போல.

௨௫௬. ஆட்கொள் நீ.

௨௫௭. வீட்டல் - கெடுத்தல்.

௨௫௮. சாழல் -ஓர்விளையாட்டு.

௨௬௧. கோதுக்கு ஆகரம் - குற் றத்திற்கு இருபபிடம்.

௨௬௩. கட்செவி வால்கொடு பிறையைச் சுற்றி நான்றிட. பொற்ற மா நகம் - அழகிய பெரிய மலை (கைலை.)

௨௬௫. சுனந்த முனிவரென் பவர், கைலாயத்திலே தாண் டவதரிசனந் தந்தருளப் பிரார்த்தித்து, சிவபெருமான் அநுக்கிரகபபடியே திருவால ங்காடடையடைந்து, நெடுங் காலம் அருந்தவம் புரிந்திருந் துழி, மண்மேடிட்டுத் திரு மேனிமறைந்து கேசத்தோடு முஞ்சிப்புல் முளைக்கப்பெற் றமையால், முஞ்சிகேசமுனி வரென்னும் திருநாமமுடை யவராயிருக்க; கார்க்கோடகர் என்பவரும் கைலாயத்திலே சிவபெருமானுக்குக் கங்கண மாயிருக்குங்கால், அறியாமை யால் விடத்தைக்கக்கி, அக் குற்றங்காரணமாக அக்கட வுளருளியவாறு அத்தலத்தை யடைந்து தவனிலையினின் று தாண்டவதரிசனம் கிடை க்கப்பெற்று அம்முனிவரோ டு முத்தியடைந்தனர். என் பது புராணம்.

௨௭0. தாலம் - பூமி.

௨௭௮. பீடாரி - இது பிடாரி யென மருவிற்று.

சுபம்.